THE STUDY OF

# Tamil Literature



*An Essay in Tamil*

By

T. SARAVANA MUTTU, B. A.

*Librarian, Presidency College, Madras.*

Price—Annas Two

Madras

SREENILAYUM PRESS

1892

# தமிழ்ப்பாஷை

ஓர் உபந்நியாசம்

திருக்கோணமலை

த. சரவணமுத்துப்பிள்ளை

இயற்றியது.

சென்னை

ஸ்ரீநிலயம் அச்சுக்கூடம்

1892

# முகவுரை.

சென்னைத்துரைத்தன பாடசாலைத் தமிழ்ச்சங்கத்தின் முன்னர் வாசித்த இவ்வுபந்நியாசத்தை எனது நண்பர்பலர் அச்சிட்டுத்தரும்படி கேட்டுக்கொண்டதன் பேரில் அச்சிடத்துணிந்தேனன்றிப் பிறிதொருகாரணம் பற்றி அச்சிட்டேனல்லன். இதிற்கூறாத சிலவற்றைச் சேர்க்கவும் கூறிய சிலவற்றைத்தவிர்க்கவும் விருப்பமுடையனேனும், இதைச்சங்கத்தின்முன் வாசித்தபடியே அச்சிடுதல் நலமெனக் கருதிச் சிறிதும் மாறாது அவ்வாறேயச்சிட்டனன். ஆகையால் இதிற்கூறியும் கூறாதும்விட்ட குறை நிறைகளைக் கற்றறிந்த பெரியோர்மன்னிப்பாராக.

# தமிழ்ப்பாஷை

ஐயன்மீர்,

தமிழ்ச்சங்கமென்னுஞ் சொற்றொடர் தமிழ்ப் பாஷையை விருத்திபண்ணும்பொருட் டேற்படுத்திய சங்கம், அல்லது தமிழ்நூற்களைக் கற்றறியும்பொருட் டேற்படுத்தியசங்கம் என இருபொருட்பட்டுக்கிடக்கும். இலக்கண இலக்கியங்களைக் கசடறக்கற்ற புலவாபலர் ஒன்று சேர்ந்து நூதனகிரந்தங்களையியற்றி உள்ள நூல்களைத்திருத்தி விளக்கும்பொருட்டு ஒருசங்க மேற்படுத்துவரேல் அதுவே தமிழ்ப்பாஷையை விருத்திபண்ணும் பொருட் டேற்படுத்திய சங்கமாகும். முற்காலத்து மதுரை, கபாடபுரம் முதலிய இடங்களி லிருந்ததாகவும், அகத்தியர், தொல்காப்பியர்முதலிய பல சிறந்தவித்துவான்களை யுடைத்தாயிருந்ததாகவும் நமது நூல்களிற் கூறப்படும் முத்தமிழ்ச்சங்கமே யிதற்கோரான்ற உதாரணமாகும். அவ்விதசங்கம் தற்காலத்துத்தமிழ்நாட்டி லெங்கேயாவ திருப்பதாக யான் கேள்விப்பட்டிலேன். தற்காலத்து தமிழ்ச்சங்கங்கள் பலவுளவேல், அவைபெரும்பாலும் மாணவகரால் ஏற்படுத்தப்பட்டவையே. சமுசாரசாகரத்தில் மூழ்கித் திகைத்திருக்கும் நமது முதியோர்க்கு இம்முயற்சி வீண் முயற்சியாமன்றோ? ஆகவே தற்கால தமிழ்ச்சங்கங்கள் தமிழ்ப்பாஷையைக் கற்றறியும்பொருட் டேற்படுத்தப் பட்டவைகளே. நமது சென்னைத் துரைத்தனபாடசாலைத் தமிழ்ச்சங்கமும் அவற்றுளொன்றேயாம். ஒருபாஷையைக் கற்பதினு

னாதியமுண்டாயினன்றோ அப்பாஷையை யறிவுடையோனொருவன் கற்கப்புகுவான். அப்பாஷையிலுள்ள நூல்கள் சிறந்தவையாயினன்றோ அவற்றையிறந்துபடாமற் காப்பாற்ற ஒருசங்க மேற்படுத்தப்படவேண்டும். யாவருக்கும் பிரயோசனமில்லாவொரு வேலையைச்செய்து வாணாளை வீணாளாய்க் கழிப்பதறியாமையாம். ஆகவே தமிழ்ப்பாஷை சிறந்ததென்ப தூஉம், தமிழ்நூற்கள் அழியாது காப்பாற்றப்படும் தகுதியுடையனவென்பதூஉம், நிரூபிக்கப்பட்ட வன்றைக் கன்றே தமிழ்ச்சங்கங்க ளவசியம் வேண்டுமென்பது புலப்படும் ஆகவே சென்னைத் துரைத்தனபாடசாலைத் தமிழ்ச்சங்க மேற்படுத்திய நமக்குத் தமிழ்நூல்களின் சிறப்பெடுத்துரைத்த லவசியமாம். அது பற்றியே இற்றைக்குத் தமிழ்ப்பாஷையின் சிறப்பைச் சிறிது என்னாலியன்றள வெடுத்துரைப்பான் றுணிந்தனன்.

யாதொருபாஷையாயினும் அதன் தாரதம்மியத்தையெடுத்துரைப்பானொருவன் அப்பாஷையைக் கசடறக் கற்றவித்துவானாயிருத்த லவசியமாக, இவ்விஷயத்தைப் பற்றி யான் பேசத்துணிந்தது யாதுகாரணம் பற்றியோவென்னில், இவ்விஷயத்தைப்பற்றிப் பேசத்தக்கவலிமை சார்ந்த வித்துவான்கள் பலரும் மௌனமாயிருந்தலினாலே யானும் பிரதேயம்புக்கோற்குச் சிறுகுழந்தையும் வழிகாட்டுவதுபோலேயும், சங்கீதவித்துவான் வீட்டிற் றவழுங்குழந்தையுங் கைக்குவந்தவா தாளந்தட்டிவாய்க்குவந்தவா பாடிக்களித்தல்போலேயும் பேசத் துணிந்தேனன்றிப் பிறிதொருகாரணம் பற்றியன்றென்க.

தமிழின் சிறப்பெதுத்தனைப்பதென்? அதன் உற்பத்தியை நோக்குங்காலத்தே அதன்மகிமையுள்ளங்கை நெல்லிக்கனிபோற் றெற்றெனப்புலப்பட லில்லையா வெனக்கடாவுவாருமுளர். தமிழினுற்பத்தியாதோ வெனப்பண்டிதரை வினவுவேமேல் அதைப்பற்றிப் பல கொள்கைக ளிருப்பதாகத்தெரியும். சப்தசமுத்திரத்தையுமோருழுந்தளவாக்கி யுள்ளங்கையில் வைத்துப் பானஞ்செய்தருளிய அகத்தியமகாமுனிவரா லன்றோ தமிழியற்றப்பட்ட தென்பா ரொருசாரார். சூரபன்மனை வேல்கொடுதடிந்து அமரர்தம்மிடரை யடியொடு களைந்த சுப்பிரமண்ணிய சுவாமியாலன்றோ தமிழியற்றப் பட்டதென்பார் மற்றொருசாரார். திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளன்றோ தமிழிற் காதிநாயகரென்றறைவோ ரனேகர். ஆகவே தமிழின்மகிமை தானேபுலப்படுகின்றதென நமது தமிழ்ப்பண்டிதர் மனமகிழ்ந்திருக்கின்றனர். ஆயின் அவர்செய்தபாவமோ தமிழ்செய்தபுண்ணியமோ யாதோ வறிகிலேன் தற்காலத்து அவர் மாற்றம் அவைகேறாது போகின்றது. ஆங்கிலேயபாஷைகற்று அனுவேனு மாங்கிலேய சாஸ்திரங்களிற் பயின்றோர்க்கு அவர் கூற்று நகை விளைக்கின்றது. யாதொருபாஷையாயினும், அது எவ்வளவு அற்பமாயிருந்தபோதினும், அது ஒருவனாற் சிருஷ்டிக்கப்பட்ட தென்பதைத் தற்காலத்துக் கைக்கொள்ளார். அதுநிற்க, சிவபெருமானே தமிழ்ப்பாஷையைச் சிருஷ்டித்தாரென வைத்துக்கொள்வேம். அதனாற் றமிழ் பெற்ற பயன்யாதோ? தமிழ்மாத்திரந்தானோ கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்டது? மறுபாஷைகள்யாவராற் சிருஷ்டிக்கப்பட்டனவோ? அன்றித்தாமே முளைத்தனவோ? சகலபாஷைகளுங் கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்டனவா

யின், தமிழ்கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்டது என உரைத்துக் கூறுவதனாற் றமிழ்பெற்ற ஊதியமென்னோ? அற்றன்று தமிழ் கடவுள்பேசும்பாஷையென்பராயின் மறு பாஷைகள் கடவுட்குத்தெரியாதா? மறுபாஷைகள்பேசுவோரிடத்துக் கடவுள் பேசவேண்டுமாயின் தமிழிலேயா பேசுவார்? அல்லது மொழிபெயர்ப்பதற்கொருவரை வைத்திருக்கின்றனரா? அல்லது அவரவரிடத்து அவரவர்பாஷையே பேசுவாராயின் தமிழைக்கடவுள் பேசினார் என்பதனால் தமிழ்க்கென்னடயன்? அதுவுமன்றிக் கடவுள் ஹீப்புறுபாஷைபேசினாரென கிறீஸ்தவரும், அராபிபாஷை பேசினாரென மகமதியரும் கூறில் அவர்க்கு யாதுசமாதானஞ் சொல்வரோ? அவர்சொல்வது பொய் யாம்சொல்வதுமெய் எனப்பன்முறை வற்புறுத்திக்கூறுவார்போலும்.

அதுநிற்க, கடவுள் தமிழையியற்றினாரென்பதற்கத்தாட்சியாதென நமது பண்டிதனை வினவுவேமேல், வடகலை தென்கலை வரையறவுணர்ந்த சிவஞானமகாமுனிவர் காஞ்சிப்புராணத் தவ்வாறு கூறினாரன்றோ? முருகமூர்த்தி திருவருள்பெற்ற கச்சியப்ப சிவாசாரியார் கந்தப்புராணத் தவ்வாறு கழறிப்போந்தன ரன்றோ? சோமசுந்தரர் துணையடிபரவும் பரஞ்சோதி மாமுனிவரும் திருவிளையாடற்புராணத் தவ்வாறு கூறியிருக்கின்றனரன்றோவென்பார். அதையும் நம்பாது நெருசுகிக்கேட்டபேமேல் உடனே,

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளியதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்தக், குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்

லேற்றுப்பயகரெனிற், கடல்வளைப்பி னிதன்பெருமை யாவரோ கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலோர் முதற்குரவ ரியல் வாய்ப்ப, இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும், இருமொழியு மான்றோரே தழீஇயினா ரென்றாலிவ், இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து, பண்ணுறத் தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை, மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ, லெண்ணிடப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ

தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்ததும் முதலை, யுண்டபாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக், கண்டதும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

என இன்னும் பலபாட்டுகளைச்சொல்லி நமது வாயை யடக்குவர். இதனாற் றமிழின்மகிமை உருபிக்கப் பட்டதாகாது. ஆனால் வேறெவ்விதமாகத் தான் தமிழின் சிறப்புக்கூறலாமென்னின், என் சிற்றறிவுக் கெட்டியவா றொருவாறு கூறுகின்றேன்.

மனிதர் தம் மனக்குறிப்பை யொருவர்க்கொருவர் அறிவிப்பதற்கு மூன்று வழிகளுள்ளன: 1. சைகை. 2. பேச்சு. 3 எழுத்து. மனிதர் சீர் திருந்துவதற்குமுன் தமெண்ணங்களைச் சைகையினாலேயே யறிவித்தனர். தற்காலத்தும் தீவாந்தரங்களிலுள்ள சீர்திருந்தாத சில

சாதிகளுள் சைகையே பெரும்பாலும் வழங்குகின்றது. சிலசாதிகளிடத்தில் பாஷையிருந்தும் பேசும்பொழுது சைகைசெய்யாவிடின் அவர்பேச்சுப்பிறர்க்குவிளங்காது. அமெரிக்காவிலுள்ள ஒருசாதியார் இருட்டிலபேசமாட்டார்கள். தம் வீட்டிற்கொருவர்வந்தால் முதல் விளக்குக் கொளுத்திப் பிறகுதான் பேசுவார்கள். அதுவுமன்றித் தற்காலத்திலுள்ள சீர்திருந்திய சாதிகளுள்ளும் நன்றாத் திருந்திய பாஷையிருந்தும் சைகையும் கூடவழங்குகின்றது நாவல்லமையிற் சிறந்தோரென்று பேரெடுத்தோர் பெரும்பாலும் சைகையின்றிப் பேசார். அவர்பேசும் பாஷை மதுரமாயுந் தெளிவாயு மிருந்தபோதினும் அவர் கூறும்பொருள் அவர் சைகையினால் நமக்குத் தெற்றெனப் புலப்படுகின்றது. எழுத்தோ 1 படமெழுதல், 2. பேசும்பாஷையை யெழுத்தினாலெழுதலென இருவகைப்படும். படமெழுதலுஞ் சீர்திருந்தாத சாதிகளிலேயே வழங்குகின்றது ஒருவன்வந்தானென எழுதவேண்டுமாயின் ஒருமனிதன் நடப்பதுபோலெழுதுவார்கள். இவ்வழக்கம் சீர் திருந்திய சாதிகளுட் பெரும்பாலு மிலாதுபோயினும் சிறுபான்மை காணலாம், ஒரு சண்டையைப்பற்றிப் பிரசங்கஞ்செய்வோ ரொருவர் சண்டைசெய்வதுபோ லெழுதப்பட்டவொருபடத்தைக் காட்டிப் பிரசங்கிப்பராயின் படமெழுதலும் சிறுபான்மை வழங்குகின்றதன்றோ! ஆயின் சீர்திருந்தியசாதிகளுள் பெரும்பான்மையுமவழங்குவது பேசலும் அதையெழுத்தாலெழுதலுமே ஆகவே திருந்தியபாஷையுடைத்தாயிருத்தல் சீர்திருத்தத்திற் கடையாளமாகின்றது. நம்முன்னோராகிய தமிழரும் பல்லாயிரவருடங்கட்கு முன்னே தமிழ்ப்பாஷையையுடையோராயிருந்ததாகத் தெரியவருகிறது. எக்காலத்துத்தமிழ்ப்பாஷையைப்பெற்

றனரோ யார்க்குந்தெரியாது.பரதகண்டத்தின் தென்பா கத்தில் திராவிடரிருந்தனர். பரதகண்டத்து முன்வசித் தோர் திராவிடரென்றும, ஆரியர் இமயமலேகடந் திந் தியாவிற்கு வந்ததன்மேல் அவர்கள் வடபாகங்களைப் பிடித்துக்கொளத் திராவிடர் தெற்கே வந்தனா என் றுஞ்சொல்வர். ஆயின் அக்காலத்துத் திராவிடர் யாது பாஷை பேசினர்களோ யாமறியேம். திராவிடபாஷை யெனத் தமிழ், தெலுங்கு, மலேயாளம, கன்னடம்முத லிய பலபாஷைகட்கும் பொதுப்பெயராயினும் ஆரியர் பெரும்பாலும் தமிழையே திராவிடமெனக் கூறிவந்த தாகத்தோற்றுகிறது. மற்றுந் திராவிடபாஷைகளைப் பார்க்கிலும் தமிழ்முந்தியதென்பது திணணம். தற்கால திராவிடபாஷைகளுக்குமுன் இவை யாவற்றிற்கும்பொ துவான பாஷையொன் றிருந்திருககலாம். அது ஆங காங்கு இருந்தபொழுது ஓரிடத்திற்றமிழாயும், ஓரிடத திற் றெலுங்காயும், மற்றோரிடத்திற் கன்னடமாயும மாறுபட்டிருககலாம்.

அதனிற்க, தமிழ் சமஸ்கிருதத்தினின்றும் பிற ந்ததென்று சொலவோர்கரு விடையாதெனாபிற்ால், அவர் அவ்வாறுகூறற்கு நியாயம்யாதென யான் வினவு வேன், சமஸ்கிருதபதங்கள் சில தமிழிலிருந்தால் தமிழ் சமஸ்கிருததினின்றும் பிறந்ததாமா ? தமிழ் எழுத்துக்களும் சமஸ்கிருத எழுத்துக்களும் சிறு பான்மை யொத்திருந்தால் தமிழ் சமஸ்கிருதத்தினின் றும் பிறந்ததாமா ? இவை காரணமனறேல் வேறுயாது காரணம் பற்றியோ ! தமிழிலக்கணத்திற்கும் சமஸ் கிருத இலக்கணத்திற்கு மிருககும் பேதத்தைநோக்கும் போதே தமிழ்வேறு சமஸ்கிருதம் வேறெனத் தெற்றெ

ணப் புலப்படுமே. இந்தியாமுழுவதும் முற்காலத்து ஒரே பாஷைவழங்கி, அப்பாஷை வடபால் பாலியாகவும், தென்பால் தமிழாகவும் இருந்தப், பாலியின்னுந் திருந்திச் சமஸ்கிருத மாயிற்றெனக் கூறுவோர் கொள்கை சரியெனத்தோற்றுகின்றது. அது சமஸ்கிருதத்திற்கும் தமிழிற்குமுள்ள சம்பந்தங்களை நன்ராய்விளக்கும் இலத்தீனுக்கும் இங்கிலீஷுக்குமுள்ள சம்பந்தமே சமஸ்கிருததிற்குமதமிழுக்குமுள்ளது. ஆயின் இலத்தினிலிருந்து வந்த சொறகளைநீக்கி இங்கிலீஷ் எழுதுவது கஷ்டமாயிருக்க சமஸ்கிருதபதமில்லாது தமிழிற் காவியமெழுதுவது சுலபமாயிருக்கின்றது. அதற்குச்சிந்தாமணி கலித்தொகைமுதலிய நூலகளே யான்றவுதாரணமாம். சமஸ்கிருதத்தினுற்றமிழ்மிகவுந் திருந்தியது நிச்சயமே. ஆயினுமென்? சமஸ்கிருதம தெற்கு வருமுன்னேயே தமிழ் மிகவுந் திருந்தியிருந்ததாகத தோறறுகிறது. தமிழிலிருக்கும பழைய நூல்களில் வடமொழிச்சொல் அபூர்வமாய் வருதலே யிதற்கத்தாட்சியாம். திராவிடபாஷைகள் சகலத்திலும் முந்தியது தமிழே. அவைகள்யாவற்றினுஞ் சிறந்ததும் தமிழே. ஆங்கிலேயபாஷையில் அரிவரிவர முன் தமிழ் திருந்தியபாஷையா யிருந்ததாயின் தமிழ் பழைய பாஷையென்பதற் கத்தாட்சி வேறுவேணுமோ?

அதுநிற்க, இப்பாஷைக்குத் தமிழெனும் பெயரெய்வாறுவந்ததெனச்சற்று விசாரிப்போம். திரவிடம் என்னும் வடமொழிச்சொல் தமிழ் என மரீஇயிற்றென்பார ஒருசாரார். தமிழ் என்னுமொழியே திரவிடமாயிற்றென்பார மற்றொருசாரார். தமிழ்என்னுமொழிக்குஇனிமையெனு மர்த்தமுண்டாகையால் தமிழ்ப்பாஷையின்

இனிமைபற்றித் தமிழெனும் பெயர்வந்ததென்பார் தமிழ்ப்பாஷாபிமாணிகள். "இதழ், இமிழ், உமிழ், கமழ், கவிழ், குமிழ், சிமிழ் என ழகரப்பேறு பெற்ற பதங்கள்போலத் தமிழ் என்னுஞ் சொல் தனிமைப்பொருள்குறித்த தமியென்னும வினையடியாற் பிறந்து, வினைமுதற்பொருண்மை உணாத்திய விகுதிகுன்றித், தனக்கிணையில்லாப்பாஷை என்னும் பொருள்பயப்பது" என்பார் மற்றொரு சாரார். தென்மொழியென்னுந் தொடர்மொழியே, தென்மொழி, தெம்மொழி, தமிழ்எனமரீஇயற்றென்பார் போப் (Dr. Pope) துரையவர்கள். திரவிடம், தமிழ், என்னும் இருசொல்லும் திரமிடம் என்னும்மொழியிலிருந்து பிறந்தன வெனப் பலநியாயங்காட்டிக் கூறுகின்றனர் கால்ட்வெல் பாதிரியார் (Rev. Caldwell). * இவற்றுட் பின்னைய விரண்டிலொன்றே சரியாயிருக்க வேண்டுமென என் சிற்றறிவுக்குத் தோற்றுகின்றது. ஆகவே யாதுகாரணம்பற்றியோ தமிழ் எனும்பெயருடைய இப்பாஷை, திரவிடபாஷைகளிலொன்றாயும், மற்றைய திரவிடபாஷைகள் யாவற்றிற்குமுந்தியதாயும், அவற்றிற்

---

* சென்னைத துரைத்தன பாடசாலைச் சமஸ்கிருதாசிரியர் அப்பாட் (Dr. Oppert) துரையவர்கள் இந்தியாவில் முற்காலத்து மள்ளர் எனுஞ் சாதியாரிருந்தனரென்றும், அவர்பாஷைக்கு மள்ளபாஷையென்றுபெயரென்றும், அப்பெயர் திருவென்னுமடைசேர்த்து திருமள்ள என்றுவழங்கியிருக்க வேண்டுமென்றும், திருமள்ள எனும் பதத்திலிருந்தே திரமிளம், திரவிடம், தமிழ் எனும் மூன்றுமொழிகளும் பிறந்தனவென்றுங் கூறுகின்றனர்.

சிறந்ததாயும், சமஸ்கிருதத்திற்குக்கீழ்ப்படியாததாயும், பல்லாயிரவருடங்களாகத் தென்னிந்தியாவில் வழங்கி வருகின்றது. தற்காலத்து இந்தியாவில் 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' எனு நான்கெல்லையுள்ளும், ஈழ தேயத்துவடக்குமாகாணம், கிழக்கு மாகாணங்களில் முக்கியமாயும், மற்றைய மாகாணங்களிற் சிறுபான்மை யும், இரங்கூன், பினங்கு, சிங்கப்பூர் முதலிய இடங் களிலும், ஆபிரிக்காகண்டத்தின் தென்முனையிலும் வழங்குகின்றது. ஏறக்குறைய நூற்றுநாற்பத்தைந்து இலட்சம்சனங்களினுற் பேசப்படுகிறது. ஏறக்குறைய ஐம்பத்தெண்ணுயிரத்தைஞ்னூறு சொற்களையுடைய தாக விருக்கின்றது. இதுவே தமிழாகிய நம்முடைய சுயபாஷை. இதைநோக்குங்காலத்து 'அம்ம! இதன் பெருமைக்கு வேறு அத்தாட்சியும் வேண்டுமோ' எனத் தோற்றுகின்றது. ஆயினும் ஒருவிரலைநீட்டி, இதுபெரி தோ சிறிதோவென்பது விளைவுழுவாருமாகையாலும், ஓர் ஆயுதம் தகும்தகாதென்பது அது செய்யுந்தொழிலை நோக்கி யாகலானும், தமிழின்பெருமையைநிலைநிறுத்த இன்னுஞ்சற்று விசாரிப்பேம்.

ஒருவன் தன் மனக்குறிப்பை மற்றோர்க் கறிவிப் பதற்குப் பாஷை முக்கியகருவி யாகின்றது. ஆகவே தமது மனக்குறிப்பை மற்றோர்க்கு எப்பாஷையிற் சுல பமாயும், தெளிவாயும், மதுரமாயும், பலவிதமாக வற் புறுத்திக் கூறமுடியுமோ அப்பாஷையே மிகவுஞ் சிற ந்தபாஷையென் றுரைக்கவேண்டும். ஆங்கிலேயபாஷை யையுக் தமிழ்ப்பாஷையையு மொத்துநோக்குங்கால த்து இரண்டிற்குமுள்ள தாரதம்மியங் காதலாயவ தம்போற் றெள்ளிதிற் புலப்படுகின்றது.

ஆங்கிலேயபாஷையிற் சுலபமாகச் சொல்லக்கூடிய தொன்றைத் தமிழிற்கூறுவது மிகவும் வருத்தமாயிருக்கின்றது. ஆயின் அதைக்கொண்டு யாம் தமிழ் எளியபாஷையெனக் கூறத்தகாது. நமக்கோ தமிழ்ப்பாஷை நமது சொந்தப்பாஷையாயிருந்தபோதினும நன்றாகத் தெரியாது. அனேக மாணவர்களுக்கு ஆங்கிலேயபாஷை தெரிந்தளவேனுந் தமிழ்தெரியாது. அது சிலர் தமிழிற் பேசுவோர்க்கு இங்கிலீஷில் விடையளிப்பதிலிருந்தும், தமிழிலேதொடங்கி இங்கிலீஷில் முடிப்பதிலிருந்தும், தமிழ்பேசும்பொழுதும் ஆங்கிலேயமொழிகளைக் கணக்கின்றிக் கலப்பதிலிருந்தும் காணலாம். அவர்கள் வாசித்ததமிழ் ஆண்டாண்டு சர்வகலாசாலைப் பரீக்ஷைகட்குப்பாடமாக வேற்படுத்திய பாகங்களே. அவர்களறிந்த தமிழ்ச்சொற்களும் அப்பாகங்களிற் காணப்பட்டவைகளே. ஆகையினால் ஒருவிஷயத்தைத்தமிழிற் கூறமுடியாதெனல் அறியாமையாகும். தற்காலதது நமக்குள்ள அறிவுடன் சொல்லமுடியாத வொருவிஷயம் இன்னுஞ்சில நூல்களைப் பார்த்தபிறகு சுலபமாகச்சொல்லமுடியலாம். தமிழிலுள்ள நூல்கள் யாவற்றையுந் தவறாது கற்றுணர்ந்தோரோ இவ்விஷயத்தைச்சொல்ல முடியாதென உறுதியாய்க்கூறலாம். ஆங்கிலேய பாஷையின் நிலைமையைப்பார்த்துப் பிறகு தமிழைப்பார்த்தல் சூரியனைப்பார்த்துப் பின் சந்திரனைப்பார்ப்பது போலாம். சூரியனுடைய பிரகாசத்தினாலே சூரியனைப் பார்த்தவுடன் கண்பொறித்தட்டி மற்றொருபொருளுஞ் சிறிது நேரந்தெரியாததுபோலவே ஆங்கிலேய பாஷையைப்பார்த்தவுடன் அதன் பிரகாசத்தினால் நமது கண் மறைந்து தமிழின் ஒளி தெரியாதுபோகவுங்கூடும். ஆயி

னுமிங்கிலீஷளவுதமிழ்சிறந்ததெனக் கற்றறியாமூடருஞ் சொல்லார்.

மண்ணுலகத்து மாந்தரும் மற்றைய சீவசெந்துக்களும் பிறந்து வளர்ந்து முதியோராவது போலவே பாஷையும் பிறந்துவளர்ந்து முதிர்கின்றது. எச்சாதியார் சீர்திருந்தி யிருக்கின்றனரோ அவரதுபாஷையும் திருந்தியிருக்கும். எப்பாஷைதிருந்தி யிருக்கின்றதோ அப்பாஷைபேசுவோருந் திருத்தமுடையோ ரென்பதற் கையமில்லை. ஆங்கிலேயர்க்கும் தமிழர்க்கும் எவ்வளவு பேதமிருக்கின்றதோ அவ்வளவுபேதம் ஆங்கிலேய பாஷைக்குந் தமிழ்ப்பாஷைக்கு மிருக்கின்றது. பதினாயிர வருஷகாலமாக ஆங்கிலேயர் எப்படிநாட்குநாள் திருந்திக்கொண்டு வருகின்றனரோ அப்படியேயவர்பாஷையு மபிவிர்த்தியாகிக்கொண்டு வருகின்றது. தமிழுந்தமிழர் சீர்திருந்தியகாலத்துத் திருந்தியவர் பின்வாங்கத் தானும் பின்வாங்கி யவருறங்கத் தானுமுறங்கியது. ஆகவேதற்காலத்துஇங்கிலீஷுக்குந்தமிழுக்கும் அளவிறந்த பேதமுண்டாதற் கிடமாயிற்று. நம்மனோர் விழித்தெழுந்து மறுபாஷைகளைக் கற்றுத் தமிழைத்திருத்துவரேல் தமிழுஞ் சிலவருடத்தில் மிகவுந்திருந்துமன்றே! ஆங்கிலேயபாஷையளவு சிறப்புடைத்தாக வருதற்குத் தடைதானென்னே!

இது காறும் தமிழ்ப்பாஷையைப்பற்றிப் பேசினோம்; இனிமேல் தமிழ்ப்பாஷையிலிருக்கும் இலக்கியங்கள்யாவை அவற்றின் குறைகுணங்கள் யாவையெனச் சிறிதுவிசாரிப்பேம். தமிழ்ப்பாஷையினாதி யாவர்க்குந் தெரியாததுபோலவே தமிழிலேழுதன்முத லெ

யெழுதப்பட்ட நூல்கள்யாவை, அவையெவராலெழுதப்பட்டன, எக்காலத்தெழுதப்பட்டன இவையாவும யாவர்க்கும் தெரிவரிதா யிருக்கின்றது. தேசசரித்திரங்க ளில்லாமையானும, முற்காலத்தைய நூலகளிலலாமையானும், பிற்காலத்து நூலாசிரியரும் முற்காலத்தைப்பற்றி யெழுதாமையானும.தமிழ்பபாஷையின்பூர்வசரித்திரம் பேரிருட்டாயிருக்கின்றது. அகத்தியரியற்றிய அகத்தியம் என்னும் பேரிலக்கணமே தமிழின் முதன்முதலெழுதப்பட்ட நூலென்பா அனேகா அகத்தியம் பன்னீராயிரஞ் சூத்திரங்கொண்டதென்றும், இயல், இசை, நாடகம என்னும் முத்தமிழுக்கு மிலக்கணங்கூறிய தென்றுங் கூறுகின்றனா. தமிழ்பபாஷை தொடங்கியவுடன் ஒருபேரிலக்கணந் தமிழிலெழுதியவிந்தை நமபனுடிதாமாகவே புலப்படும. யாதொரு சிறுகாரியத்திற்கும் சூத்திரமெடுத்துக்காட்டும் பண்டிதா வித்துவான்கள்முதலியோா "இலக்கியங் கண்டதற்கிலக்கணமியம்பலில்' என்னுஞ்சிறுகன்னூற் சூத்திரத்தைமறந்து தமிழிலிலக்கிய முண்டாகுதற்குமுன்னேயே அகத்தியா தமிழிலேயொரு பேரிலக்கணமெழுதினுரெனக்கூறலும் ஒரு பெரும் விந்தையே. ஆயினுமென்? சப்தசமுத்திரத்தையுமொருழுந்தளவாக்கி யுள்ளங்கையில்வைத் தாசமனஞ்செய்தருளிய அகத்தியர்க்கு இலக்கியமின்றி யிலக்கணமெழுதல் ஒருபெருங்காரியமோவெனச்சமாதானங்கூறலும் பண்டிதர் பாண்டியத்திற கெட்டியதன்றிச் சின்னூட்பல்பிணிச்சிற்றறிவினராகிய நமக்குப்புலப்படும் பொருளோ ? அகத்தியரியற்றியதாகக்கூறப்படும் பன்னீராயிரம் சூத்திரங்களுட் தொல்காப்பியரா லெடுத்தாளப்பட்ட சிலவும், உரையாசிரியர்களா லெடுத்தாளப்பட்ட சிலவுந்தவிர மற்றவையாவுமிறந்துபோயினவாகத்தோற்

றுகின்றது. இவ்வகத்தியர்க்கு தொல்காப்பியன், அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவிநயன், காக்கைபாடினியன், நற்றத்தன், வாமனன், எனப் பன்னிரு மாணாக்கரிருந்ததாகவும், அவர் தம்மைக்கொண்டு வெவ்வேறு பன்னிரண்டிலக்கணங்களும், அனைவருமொருங்குசேர்ந்து புறப்பொருட் பன்னிருபடலமென ஒரு நூலு மியற்றினதாகக் கூறுவர். அவற்றுட் தொல்காப்பியமொன்றே நமக்குக்கிடைத்தது தொல்காப்பியம தற்காலத்துள்ள மற்றையதமிழ் நூல்களைப் பார்க்கிலும் முந்தியதாகத் தோற்றுகின்றது. இதுவே தமிழிற்குச்சிறந்த இலக்கணம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணியென்னு மைந்தையும்பற்றிச் சொல்லும இந்நூலில் வடமொழிப்பதங்க ளருமையாயிருத்தலே இது முந்தியதென்பதற்கோ ரத்தாட்சியாகும். இதற்கு இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என ஐவர் உரைசெய்தன ரெனக்கூறல் வழக்கம். ஆயின் இளம்பூரணருரையில் எழுத்ததிகாரமும், சேனாவரையருரையில் சொல்லதிகாரமுமே வழங்குகின்றன. கல்லாடருரையும் பேராசிரியருரையுங்காணேம். நச்சினார்க்கினியருரையே சகலத்திற்கும் பிந்தியதும், தொல்காப்பியமுழுவதற்கு முள்ளதும். நச்சினார்க்கினிய ருரைவல்லபங்கூறிற் பெருகுமாதலின் விட்டனன். அவர்பேரோ யவர்குணத்தை நன்றுவிரிக்கின்றது. இவரதுரையையு மிறந்துபோகாதபடிகாத்து நமக்கச்சிட்டளித்த ஸ்ரீமத். சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கட்குத்தமிழர்யாவரும் என்றும் நன்றியறிவுடையோரா யிருத்தல்வேண்டும். இவராலேயே தொல்காப்பியஞ் சேனாவரையமு மச்சிடப்பட்டது,

தொல்காப்பிய மிக்காலத் தெழுதப்பட்ட தெனக்கூற முடியாது ஆயிரம்வருடங்கட்கு முன்னென்பார சிலர், மூவாயிரம் வருடங்கட்குமுன் னெனபார் சிலர். இருபதி னாயிரம் வருடங்கட்கு முன்னென்பாருமுளர.

இக்காலத்திலேயே முத்தமிழ்ச்சங்க மிருந்ததாகக் கூறுகின்றனர். முதற்சங்கங் கடல்கொள்ளப்பட்ட மது ரையிலிருந்ததெனவும், சங்கமிருந்தார் ஐஞ்ஞூற்று நாற் பத்தொன்பதின்மர் எனவும், நாலாயிரத்து நானூற்று நாற்பததொன்பதின்மா பாடினரெனவு ம, பாடப்பட் டவை வேத்துவேயோர் பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையுமென இத்தொடக்கத்தன வெனவும்; இடைச்சங்கம் கபாடபுரத்தி லிருந்ததென வும், சங்கமிருந்தார் ஐஞ்ஞூற்றொன்பதின்ம ரெனவும மூவாயிரத தெழுநூற்றுவர் பாடி னரெனவும், பாடப்பட் டவை கலியுங்குருகும் வெண்டாளியும், வியாழமாலைய கவலுமென இத்தொடக்கத்தன எனவும; கடைச்சங்கம் வடமதுரையிலிருந்த தெனவும், சங்கமிருந்தார நாற் பத்தொன்பதின்மரெனவும், நானூற்று நாற்பததொன் பதின்மர் பாடினரெனவும், பாடப்பட்டவை எட்டுத் தொகையும், பேரிசையுஞ், சிற்றிசையுமென் றித்தொ டக்கத்தன வெனவும் வித்துவான்கள்கூறுவா. ஆயின் உள்ளதை யுள்ளபடி கூறல் தமிழ்ப்பண்டிதர் குணமன் மையின் உண்மையும் அவர்வாயில் வரும்பொழுது உண்மைநிறம்மாறிப் பொய்யாகின்றது. ஆகவே சங் கங்களைப்பற்றிக் கூறுவனவற்றுள் உண்மை யெவ்வளவு பொய்புளுகு எவ்வளவெனக்கண்டு பிடிக்கத்தொடங் கல் பகீரதப்பிரயத்தனமாகும். இச்சங்கங்களுள் ஒவ் வொன்று பல்லாயிரவருட மிருந்ததாகவும், இச்சங்

ங்களில் சிவன், சுப்பிரமணியர்முதலிய கடவுளர் சங்கத்தவராய் வீற்றிருந்தனரெனவும், இச்சங்கங்கட்குத் தெய்வீகமானசங்கப்பலகையொன்றிருந்ததாகவும், இவ்வித பல கதைகளைக்கூறுவதனுல் உள்ள உண்மையும் மறைந்துபோகின்றது. கடைச்சங்கத்தி லியற்றப்பட்டனவாகக் கூறப்பட்டவற்றுட் சிலவே தற்காலத்து வழங்கும் நூல்களுட் பழையன.

இக்காலத்துநூல்களிற் சிறந்தகாவியமைந்து: சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதியென்பன. இவற்றுள் சிந்தாமணியும் சிலப்பதிகாரத்தி லொருபாகமுமே அச்சிடப்பட்டிருக்கின்றன. திருத்தக்கதேவரியற்றிய சிந்தாமணி பதின்மூன்றிலம்பகத்தில் சீவகனது கதையைக்கூறுவது, நச்சினூர்க்கினியராலுரை செய்யப்பட்டது. சொல்லழகும் பொருளழகும் நிறைந்துள்ளது. ஆங்கிலேயராலும் மிகவுஞ் சிறந்ததெனக்கணிக்கப்பட்டது. தமிழிற்சிறந்த காவியங்களுள் முக்கியமானதொன்று. மூவாயிரத்துநூற்று நாற்பத்தைந்து செய்யுட்கொண்டது. கற்கக்கற்க இன்பம்பயப்பது. சேரர்குலத்துதித்த இளங்கோவடிகளியற்றிய சிலப்பதிகாரம் கோவலன் கதையைக்கூறுவது. புகார்காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக்காண்டம் எனமூன்று பிரிவுள்ளது. கற்றோர்சிலராற் சிந்தாமணியி னின்றுஞ் சிறந்ததெனக் கூறப்பட்டது. புகார்காண்டமே அச்சிடப்பட்டது. மணிமேகலை சிலரிடத்துக் கையெழுத்துப் பிரதியாயிருக்கின்றது. வளையாபதி, குண்டலகேசி யிரண்டும் இருக்கின்றனவோ இறந்துபட்டனவோ தெரியாது. இவையன்றிச் சமணரியற்றிய யசோதரகாவியம், உதயணன்காதை, நாக

குமாரகாவியம், சூ[illegible]ணி, [illegible] சில) சிறு காவியங்களுள. இவற்றுள் சூளாமணி ஸ்ரீமத் சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டிருக்கின்றது. சொற்சுவை [illegible] தற்காலத்துச் சிறுபிரந்தங்களுள் அதற்குச்சமானமானது ஒன்றுங்காணேம். மற்றவற்றுள் யசோதரகாவியம் முன்னொருவரா லச்சிடப்பட்டிருக்கின்றது மற்றவை யச்சிடப்படவில்லை.

இவையன்றி, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என எட்டுத்தொகைகளுள்ளன. இவற்றுள் நல்லந்துவனார் கலித்தொகையொன்றுமே யச்சிடப்பட்டிருக்கின்றது. 'கற்றறிந்தோரேத்துங் கலி'யென்னுமபொழுதே யதன்சிறப்புத்தோற்றுகின்றது. மற்றத்தொகைகளுட் சில கையெழுத்துப் பிரதியாக விருக்கிறதாகக்கேள்வி. சில விறந்தனபோலும். இவையுமன்றி, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்துப்பாட்டுகளுண்டு. இவை யாவும் ஒன்றாய் நச்சினார்க்கினியருரையுடன் ஸ்ரீமான் வே சாமிநாதையரவர்களா லச்சிடப்பட்டிருக்கின்றன. சிந்தாமணிக் குயிரளித்த புண்ணியவாளனு மிவரே. தமிழிலுள்ள சிறுபாட்டுக்களிற் சிறந்தவை யிவைபத்துமே. இவையன்றி, நாலடி, நான்மணி, முதலியபதினெண் கீழ்க்கணக்கெனக்கூறப்படும் பதினெட்டும் சங்கத்திற்குச் சேர்ந்ததாகவே கூறுவர். இவற்றுட்பல நீதி

நூல்களே. கல்லாடரியற்றிய கல்லாடமென்றுஞ் சிறந்த நூலுமிக்காலத்திற்குச் சோரததாகவே யிருக்கவேண டும். அது அக்காலத்திலேயே பேர்பெற்ற நூலாயின், இக்காலததகன் மகிமையை யென்சொல்லவேணடும. ஆனல் அதையாரு முபயோகிப்பதைககாணேம.

[ இவை தோன்றியகாலத்தே தோன்றிப் பொருளில் இவையாவற்றிற்குஞ்சிறந்ததும், தமிழ் எனுமாது உச்சியிற்றரிக்குஞ் சூடாமணியெனச் சொல்லக்கூடியதும், தமிழின்பெருமையை யெங்குமபரவச்செய்ததுய சாதிபேதம் மதபேதமின்றி யாரு மெக்காலத்துங் கைக கொள்ளக்கூடியதும், தமிழர்க்குப் பெருஞ்செல்வமாயதும் திருவள்ளுவரியற்றிய திருக்குறளே. இந்நூலிலத்தின் பாஷையிலிருவராலும், பிராஞ்சிலொருவராலும், சார்மேனிய பாஷையிலொருவராலும், ஆங்கிலேயபாஷையில் மூவராலும மொழிபெயர்க்கப்பட்டுளதாயின் இதன் பெருமையையாரே யெடுத்துரைக்க வல்லேன் தமிழ்வேதமென்னும் பெயருமிதற்குத் தகுந்ததே இவ் விதநூல் வேறொருபாஷையிலு மில்லையாயின் இதனுற் றமிழுடையுமபெருமை யிவ்வளவிற்றெனவெடுத்துரைக்கற்பாற்றே! இந்நூல் அறம்,பொருள், இன்பம, வீடு என்னும் நான்கில் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையுமே 1330 குறளிற்கூறுவது. வீட்டைப்பற்றி யேன்கூறவில்லையோ தெரிதலரிது. வள்ளுவர் நான்கையும்பற்றி யெழுதியிருப்பார் வீட்டுப்பாகம் இறந்துபோயிருக்கவேண்டுமென்பர் சிலர் அறம்,பொருள், இன்பம் மூன்றும்பாடி வீட்டைப்பற்றிப்பாட முன் வள்ளுவர் இறந்திருப்பர் என்பர் சிலர். அனுபவத்தைக்கொண்டு அறம்,பொருள்,இன்பம் என்னும்மூன்றையும் பறறியுறு

றியாச் சொல்லியவர் வீட்டைப்பற்றி யுறுதியாச்சொல்ல முடியாமையின் எழுதாது விட்டனர் என்பர் சிலர். இந்நூல் சகலசாதிகளிடத்திலும், சகலமதத்தரிடத்திலும், பரம்பவேண்டுமென்னும் விருப்புடையோராய், சகலர்க்கும் பொதுவான அறம், பொருள், இன்பம் என்னுமூன்றையும்சொல்லி வீடு சகலர்க்கும் பொதுவாகாமையின் கூறாது விட்டனர் என்பர் ஒரு சாரார். அஃதெவ்வாறாயினுமாகுக. அது இற்றைக்காயிர வருடங்கட்கு முன் குறள் போன்ற ஒருநூல் இயற்றியதமிழர் மிகவுஞ் சிறந்திருந்தனர் என்பதற்கோர் அத்தாட்சியாகும். ஆயின், இவ்வள்ளுவர் எங்கிருந்தனரோ, யாதுதொழிற்செய்தனரோ, எம்மதத்தரோ, எக்காலத்திருந்தனரோ இவையாருமறியாமறைபொருளாயிருக்கின்றன. மயிலாப்பூரிலிருந்தனர் என்றும், நெய்தற்றொழில் செய்தனரென்றும் பெரும்பான்மையும் சொல்வர். சைவர்கள் இவரைச் சைவரென்பர். வைணவர் வைணவரென்பர். போப் (Dr. Pope) துரைகிறிஸ்தவர் என்பர் போலும். சமணர் இவரைச் சமணரென்றே கூறுவர். இக்காலத்திலேயே திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி முதலிய நிகண்டுகளும், பவணந்திமுனிவரியற்றிய நன்னூலும் எழுதப்பட்டன எனக்கூறுவர். இத்துடன் தமிழணங்கின் வாலிபதிசையும் பூர்த்தியாயிற்றெனக் கூறல்வேண்டும். இவற்றிற்கும், இவற்றிற்குப்பின்வரும் மற்றைய நூல்களுக்குமுள்ள பேதத்தை நோக்குங்காலத்து, இவ்விருகாலத்துக்குமிடையில் இருநூறு முந்நூறு வருடங்கள் சென்றிருக்க வேண்டுமெனத் தோற்றுகின்றது. ஆயின் இடையேசென்ற இக்காலத்து நூல்கள் எழுதப்பட்டனவோ, எழுதப்படவில்லையோ, இவ்

லேயேல் அது யாதுகாரணம்பற்றியோ, இவையார்க்கும் புலப்படா. ]

இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரவருடங்களுக்கு முன்னே தமிழில் இராமாயணம் பாடப்பட்டதென்பர் சிலர். சமஸ்கிருதத்திற்கு வான்மீகியும், கிரேக்கருக்கு ஹோமரும், ஆங்கிலேயர்க்கு மில்றனும் போலத்தமிழுக்குக் கம்பருளர். உலகத்திலுள்ளமலைகள் யாவற்றிற்கும் இமயமலையெவ்விதமோ அவ்விதமே தமிழிலுள்ள கவிகள்யாவர்க்குங் கம்பர். கம்பரின் அறிவும், கம்பரின் வாக்குவல்லபமும் இவ்வளவிற்றென அளவிடற்பாலனவோ? சிறந்தகவியொருவற்கு வேண்டியகுணங்கள் யாவையோ வவையாவுங் கமபரில் நிறைந்திருக்கின்றன. மற்றுந் தமிழ்க்கவிகளிலுள்ளகுறைகள் கம்பரில் ஆங்காங்கே தோற்றுகினும் இதரதேய கவிகளிலுள்ள நற்குணங்கள்யாவும் கம்பரில் காணப்படுகின்றன. தமிழிலக்கியத்தின் மகிமை நம்பாதவொருவற்குக் கம்பராமாயணமொன்றுமே தமிழின் மகிமையை நிலைநிறுத்தும். இதரதேயத்துமுக்கிய கவிகளுடன் சம ஆசனத்தினுட் காருந்தகைமையுடையவர் கம்பரே. தமிழணங்கினுச்சியிலணியும் இரத்தினச் சூடாமணி திருக்குறளாயின், அவ்வணங்கின் மார்பிற்றுலங்கும் நவரத்தினமிழைத்த மகரகண்டிகை கம்பராமாயணமென்பதற்குச் சிறிதுமையமுளதோ? கமபர் வான்மீகத்திலிருந்தபடி இராமாயணத்தை மொழிபெயர்த்தவரல்லர். இராமாயணக் கதையை யெடுத்துக்கொண்டு தாமொரு இராமாயணமியற்றியவரே. வான்மீக இராமாயணத்திற்குங் கமபராமாயணத்திற்குங்கதையிலேயே பலவிடத்திற் பேதமிருக்கின்றன, இரண்டு இராமாயணத்தையும் பார்த்

ஒருசார்சிலர் கம்பராமாயணமே சிறந்ததென்பர். கதை சொல்லும் விதத்திலும், வர்ணனையிலும், ஒருவரோடொருவரைப் பேசச்செய்யும் விதத்திலும கம்பருக்கிணையாவார் தமிழில் வேறு யாவர்? அதுவுமன்றிக் கம்பராமாயணத்தை யெங்கெடுத்துப்பார்க்கிலும் அங்கங்கே யற்புதமாயிருக்கும். சிலகாலத்துக்குமுன் யான் கம்பராமாயணம் வாசிக்கத்தொடங்கிப்பாலகாண்டம் வாசித்தபொழுது இராமாயணத்திற் பாலகாண்டமே சிறந்தபாகமென நினைத்திருந்தேன். பின் அயோத்தியாகாண்டம் வாசிக்கும்பொழுது பால காண்டத்தைப் பார்க்கிலும் அயோத்தியாகாண்டமே சிறந்த தென்றேன். பின் ஆரணியகாண்டதிற்கு வந்தபொழுது சந்தேகமின்றி யாரணியகாண்டமே சிறந்ததென்றேன் யுத்தகாண்டம்வரைக்கும் வாசித்தோரொருவர் யுத்தகாண்டம் மற்றெல்லாக் காண்டத்தைப்பார்க்கினுஞ் சிறந்ததென்றார். இவ்விதங் கூறின் சிறந்ததெது சிறவாததெது? ஆதிதொடங்கி யந்தம்வரையு மானந்தக்கடலாயிருக்குமாகின் அதன் சிறப்பையெடுத்துரைக்க யானேவல்லேன்? தமிழிலிருக்கும் நூல்களிற் கம்பராமாயணந்தவிர மற்றுயாவு மழிந்தபோதினும், கம்பராமாயணமொன்றுமே தமிழுக்கு அளவிறந்த பெருமை கொடுக்குமாயின், கம்பராமாயணம் இத்தன்மைத்தெனச் சொல்லற்பாலதோ! அது நிற்கக் கம்பர் யார்? அரசன் என்பார் ஒரு சாரார். வேளாளனென்பார் மற்றொரு சாரார். வைணவனென்பர் வைணவர், சைவன் என்பர் சைவர். சமணனென்பார் யாருங்காணேம். 'கற்றோர்கவியுட் பெரிதாந்தமிழ்க் கம்பநாடன்' சரித்திரமே இவ்வாறிருக்கின்தமிழ்ப்புலவர்சரித்திரம் எங்குகண்டுபிடிப்பேம? இராமாயணம் முழுவ

தும் கம்பராற்பாடப்பட்டதன்று. பாலகாண்டமுதல் யுத்தகாண்டமவரைக்குமே கம்பர் பன்னீராயிரத்துச் சொச்சச்செய்யுளாற் செய்திருக்கின்றனர். உத்தராமா யணம் அவாகாலத்துவசித்த ஒட்டக் கூத்தரால் இயற் றப்பட்டுள்ளது. அவாகாலத்துவசித்த புகழேந்திப் புலவ ரால் நளவெண்பாவென்னும்திவ்விய கிரந்த மியற்றப் பட்டது.

இக்காலத்திற்குமுன் எட்டுத்தொகை பத்துப் பாட் டுத்தோன்றிய காலதகிருந்த அவ்வையாரையும் யாம் கவனியாதுவிடக்கூடாது அவ்வையாரியற்றிய பெருங கிரந்தமில்லாதுபோயினும் யாம் அனைவருஞ் சிறுவயதிற் கற்ற ஆத்திசூடி, கொன்றைவேந்தன்முதலியவற்றை மற த்தலரிதாயிருக்கின்றதே. அதுவுமன்றி அவ்வையார்பெ ணென்றபொழுதே யவாபெயரை யாம் எப்பொழு தும மனத்தில் வைத்திருக்கவேண்டியதாயு மிருக்கின் றது முறகாலத்தில் பெணகல்வியிருந்ததற்கும் இது அத் தாட்சியாகின்றது.

இராமாயணமமுதலிய தோன்றியகாலத்திற்கு முந்தி யே தமிழ்ப்பாஷைக்குச்சிறந்த பாககியமாகியதேவா ரஙகளெழுதப்பட்டன. இவை அப்பா, சுந்தரர், சம பந்தரொனு மூவராலெழுதப்பட்டன. இவர் மூவரில பிந்தியவா சுந்தரரே. யாவுங் கடவுளமேற் றுதியாகக கூறப்பட்டனவேனும் தமிழ்ப்பாஷையின் வல்லபத் தையும் இனிமையையுந் தெற்றெனக்காட்டககூடிய வை இவைகளே. வாசிப்போர்மனதையுருக்கும் வல்ல மை தமிழிறகிலலையென்போர்க்குத் தேவாரப்புத்தக மொன்றைக் கையிற்கொடுத்தல் நன்மருந்தாகும். தே வார மேதேனுமொன்றைப் பண்ணுடன் சொலலுங் காலத்து நீர்ச்சுரவாதிக்கும் மனமுருகுமாயின்தேவாரத

இதன் சிறப்பைச்சொல்லவும் வேண்டுமோ? மாணிக்க வாசகரியற்றிய திருவாசகமு மித்தன்மையதே. திருவாசகம் தேவாரத்திற்கு முந்தியதே போலும். இத்தன்மையதான வைஷ்ணவர்க்குச்சிறந்த திருவாய்மொழியும் ஏறக்குறைய இக்காலத்திலேயே தோன்றியது.

இவையாவற்றிற்கு மைந்தாறு நூற்றாண்டிற்குப் பிந்தியே தமிழில பாரதமும் நைடதமு மெழுதப்பட்டன. இதற்குமுதல்சங்கத்தாரகாலத்தெழுந்த பெருந்தேவனார் பாரதமே வழங்கியிருக்கவேண்டும். அது வெண்பாவாலும், வசனத்தாலு மியற்றப்பட்டது. பின் வில்லிபுத்தூரா இயற்றியது விருத்தபாரதம். இது மிகவும் நல்லநூலாயினும் தமிழிலிருக்கும் முக்கியநூல்களிலொன்றன்று. வில்லிபுத்தூரர் பாரதக்கதையைச்சுருக்கி யெழுதியதுமன்றி,முடியவும் எழுதவில்லை பாரதயுததம்முடிய வில்லிபுத்தூரர் பாரதமுமுடிகின்றது சமஸ்கிருதத்திற்கு வியாசபாரதம எவ்வளவு கீர்த்திபெருக்கிற்றோ அதிற்பாதியேனும தமிழிற்கு வில்லிபுத்தூரர் பாரதஞ்செய்யவில்லை அதிவீரராமபாண்டியனியற்றிய நைடதமபலராலும் புகழப்பட்டதேனும் மிகவுஞ்சிறந்த நூலன்று. தமிழிலக்கியங் கற்கத் தொடங்குவோர்க்கு முதலில மிகவுமானந்தங்கொடுப்பது நைடதம். ஆயின் அதன்சிறப்பு வரவரக்குறையும். அதிவீரராமன்மற்றுங் கவிகளைப்பார்த்துத் தன் யுக்திவல்லபத்தாற் செய்ததுவேயொழிய நைடதம் கம்பனைப்போன்ற ஒரு மகாகவியினாலியற்றப்பட்ட நூலன்று நைடதந்தவிர அதிவீரராமன் காசிகாண்டமும், கூர்மபுராணமும், வெற்றிவேற்கையும் இன்னுஞ் சிலசிறுநூல்களு மியற்றினன். இக்காலத்திலேயே ஈழதேசத்திலிருந்த மகா

கவியாகிய அரசகேசரியென்பவரால் இரகுவம்மிசந் தமிழிலியற்றப்பட்டது. அது மிகவும்சிறந்தநூலே ஆயின் அது இக்கியாக்களாயில் மிகவும்வழங்கக்காணோம். இக்காலத்து சமஸ்கிருதம் மிகவும் பிரபல்லியமடைந்ததென்பதும், தமிழ்வித்துவான்கள் பலரும் சமஸ்கிருதங் கற்று அதிலுள்ளபடி தமிழிற் கிரந்தமியற்றத் தொடங்கினரென்பதும், சிறந்தகவிகளாகிய அதிவீரராம பாண்டியன், வில்லிபுத்தூரர், அரசகேசரிமுதலியோர் சமஸ்கிருதநூல்களைத் தமிழிலெழுதுவதிற் றிருப்தியடைந்திருந்தமையே காட்டும்.

இனிப் புராணத்தைப்பற்றிச் சற்றுவிசாரிப்பேம். புராணந்தொடங்கிய காலத்திலேயே தமிழுக்கும் அஷ்டமத்திற்சனிவந்தது. தமிழ்மகிமை யிழந்ததற்கும், சிறந்தகாவியமுதலியவை யெழுதப்படாது போயதற்கும், புராணமேமுக்கியகாரணமென யான் நினைக்கின்றேன். தமிழிலெழுதக்கூடிய பெருநூல்களில மிகவுஞ் சுலபமாயெழுதக்கூடியது தலபுராணமே. தற்காலத்துத் தலபுராணங்கள் கணக்கற்றுப்பெருகியதும் இதனாலேயே. இப்புராணங்கள் எழுதப்பட்டிருக்கும் பாஷையிலிருந்தும், இப்புராணங்களிற் கூறப்படும் விஷயங்களிலிருந்தும், தமிழணங்கிற்கு வாக்குமாறியவிருத்தாப்பிய காலம் வந்தது தோற்றும். புராணகாலத்தை யிருகூறு கப்பிரிக்கலாம். முற்கூற்றில்வரும் புராணங்கள் மிகவும் சிறந்தவைகளே. மேற்கூறிய குற்றங்கள் இவற்றிற்குப் பொருந்தா. இப்புராணங்களை இயற்றியோர், இராமாயணம், சிந்தாமணிமுதலிய நூல்களை மாதிரியாக வைத்து எழுதினவர்களாகையால் இப்புராணங்களும் மிகவுஞ்சிறந்திருக்கின்றன. பரஞ்சோதிமாமுனிவரியற்

றிய திருவிளையாடற் புராணமும், சிவஞான முனிவரியற்றியகாஞ்சிப்புராணமும், கச்சியப்பமுனிவரியற்றிய தணிகைப்புராணமும், கச்சியப்ப சிவாசாரியரியற்றிய கந்தபுராணமுமே புராணங்களுட் சிறந்தன.

திருவிளையாடற்புராணம் சிவபெருமானது அறுபத்துநாலு திருவிளையாடலையும் பற்றிக்கூறும். இதிலேயே பாண்டியரது சரிதமும் தமிழ்ச்சங்கத்தின்சரிதமுங் கூறப்பட்டுள்ளது இதுமிகவும் பழநூலன்று.

பெரியபுராணம் அறுபத்துமூன்று சிவனடியார்களின் சரித்திரத்தைக்கூறுவது. இது சேக்கிழார் சுவாமிகளாலியற்றப்பட்டது, சைவர்களால மிகவும் கொண்டாடப்படுவது.

காஞ்சிப்புராணம், தணிகைப்புராணம் இரண்டும் தலபுராணம். இவை பிற்காலத்தன.

கந்தபுராணம் ஸ்ரீ கைலாயபதியாகிய சிவபெருமானின் திருக்குமரர் சுப்பிரமணியக்கடவுளின் சரித்திரத்தைக்கூறுவது. புராணங்களுட்சிறந்த திதுவெனச்சொல்லவேண்டும். இதைப்பெருங்காப்பியமெனல் மிகவும் பொருந்தும். கம்பராமாயணத்திற்குச் சற்றேறிட்டவரும் மகத்துவத்தையுடையது. கற்றறிந்தோர்க்கு மிகவுமானந்தங்கொடுக்கும் வல்லமைத்து. சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை யேராளமாய் நிறைந்துள்ளது ஆங்கிலேயர்முதலிய பிறசாதியார்க்குத் தமிழின் மகிமைக் கெடுத்துக்காட்டாக நூல்காட்டவேண்டுமேல் முதல் இராமாயணம்,இரண்டாவது கந்தபுராணம் எனக்காட்டக்கூடிய தகைமைத்து. தமிழ்நூல்

களிற் சிறந்தவற்றுள் முக்கியமானதொன்று. பதிற்றுப் பிரத்துச்சோச்சச் செய்யுட்கொண்டது. இது தென்னிந்தியாவில் மிகவும் வழங்காமைக்கும், நமது சர்வ கலாசாலையாரால் எடுத்தாளப்படாமைக்கும் காரணம் யாதோ அது என்சிற்றறிவுக்கெட்டிலது.

இரண்டொரு நூற்றாண்டிற்கு முந்தியிருந்த தாயுமானவர் பாடல்களும் சாமான்னியமானவை யல்ல. வேதாந்தக்கடலைக் கரைகண்டுணர்ந்து வேதாந்த முழுவதையும் செவிசுகமதுரமான பாககளாற் பாடியருளின தாயுமானவர் தமிழிற்கோர்சிறந்த ஆபரணமன்றோ? கற்றோரதவிரக் கல்லாமூடராயினும் சாதாரணமாய்வருவது தாயுமானவர் பாட்டன்றோ? தாயுமானவரைக்கொண்டன்றோ அநேக ஏழைப்பண்டாரங்கள் வயிறுவளர்க்கின்றனர ?

புராணங்களை யிருகூறாகப்பிரித்து முற்கூற்றைப் பற்றிச்சிறிது சொன்னேன். பிற்கூற்றுப்புராணங்களின் காலமே தமிழுக்குங் கலிகாலம். விருத்தாப்பிய மடைந்த தமிழணங்கிற்குப்பஞ்சப்புலனுமஇச்காலத்துக்கெட்டனபோலும். இப்புராணங்களே தமிழைப்பாழாக்கின பெரும்பேருடையன. ஆலையில்லாவூருக்கு இலுப்பைப் பூச்சர்க்கரைபோலவும், ஊமைக்குளறுவாயன் மகாவித்துவானென்பது போலேயும், தட்டிப்பேச ஆளில்லாவிட்டாற் றம்பி சண்டப்பிரசண்டனென்பதுபோலேயும், காரிகைகற்றுச் சொற்றொடர்க்கப் பழகினோர் யாவரும் புராணமெழுதத் தொடங்கின் தமிழென்னபாடு தான்படாது? தமிழிலிருக்கும் புராணங்களோ நூற்றுக்கணக்காயிருக்கின்றன. ஆயினவை நூற்றுக்குத்

த்தான் ஞானற்றென்பது போலிப்பண்டி கையில் அக்கினி வளர்த்தற்கே தக்கனவாயின், இப்புராணங்களிருக்கின்றனவென்று யாம் மகிழவும் வேண்டுமோ? இப்புராணிகர் தமிழிற்காவது உலகத்திற்காவது யாதுநன்மை தான் செய்தனரோ! இவற்றை நினைக்குந்தோறும் எனக்குமனம் புழுங்குகின்றது; காணுந்தோறுங் கணே கலங்குகின்றது. அந்தோ! இந்நிலைமை தமிழர்க்கும் வரவேண்டுமோ! புராணகாலத்தின் முற்கூறிய சிறந்த புராணங்கள் சிலவெடுத்துக் காட்டினேன். இப்பிற்கூற்றினும் சிறந்தபுராணங்கள் சிலவுளவேனும் எடுத்துக் காட்டிற்பெருகுமாகலின் காட்டாதுவிட்டனன்.

இதுநிற்க, கோவையென்னும் பெயருடைத்தாய், அகப்பொருண்மேலதா யியற்றப்படும் நூல்கள் தமிழிற் சிலவுள. இவ்வித நூல்கள்வேறு யாதொரு பாஷையிலு மிருப்பதாகயான் கேள்விப்பட்டிலேன். இவைதமிழ்ச்சேயுரியன. இவற்றுட்பலவுளவேனும், மாணிக்கவாசகரியற்றிய திருக்கோவையாரும், பொய்யாமொழிப்புலவரியற்றிய தஞ்சைவாணன் கோவையுமே மிகவும்பலராலும் வாசிக்கப்படுவன.

முற்கூறிய இலக்கணநூல்களன்றியாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்னும்யாப்பிலக்கணங்களும், தண்டியலங்காரம், மாறனலங்காரம் என்னும் அணியிலக்கணங்களும் பழையகிரந்தங்களே. ஆயின் எக்காலத்திற்குரியனவோ அறியேன்.

பிற்காலத்தைய தமிழிலக்கணங்களுள்வைத்தியநாதநாவலரியற்றிய இலக்கண விளக்கமும், ஈசானதேசிக

ரிபற்றிய இலக்கணக்கொத்தும், சுப்பிரமணியதீக்ஷிதர் இயற்றிய பிரயோகவிவேகமும், சிவஞான சுவாமிகளியற்றிய தொல்காப்பியச் சூத்திரவிருத்தியும், இலக்கணவிளக்கச்சூறாவளியும்,சங்கரநமச்சிவாயப்புலவர் எழுதிய நன்னூல்விருத்தியுமே சிறந்தன.

ஆயின், இவையாவும் இயற்றமிழன்றோ? இயல், இசை, நாடகம் பற்றித்தமிழுக்கு முத்தமிழ் எனப்பேர் போந்திருக்க, இயலமாத்திரங்கூறி மற்றையவிரண்டுங் கூறாதொழிந்தமையாது காரணம்பற்றியோ வென்பிரேல், ஐயன்மீர், தற்காலத்து நமக்குக்கிட்டியது இயற்றமிழொன்றுமே இசை, நாடகம், இரண்டும் இறந்தனவெனக் கற்றறிந்தோர் கூறுவார். இசை நாடகம் என்னும் பெயர்களையும், பெருநாரை, பெருங்குருகு, குணநூல், முறுவல்,சயந்தம், செயிற்றியம், என்னும் பெயர்களையும், இயற்றமிழ்ப் புத்தகங்களிற் காண்கின்றோமன்றி, இசைநாடகப்புத்தகங்களைக் கண்டேமல்லேம். இசைத்தமிழ் எனக் கூறப்பட்டது சங்கீதசாஸ்திரத்தையோ, அன்றிச் சங்கீதத்திற் கமைந்த பதங்களையோ அறியேம். நாடகத்தமிழ் எனக்கூறப்பட்டதும் நாடக இலக்கணமோ, நாடகங்கள்தாமோ அறியேம். நாடகங்களேல், இவை தற்காலத்துத் தானுதானுதந்தனனு,என ஊரத்துக்கதறிக் களரிகுலுங்க குதிமிதிக்கும் கூத்துக்களோ, அன்றேல் ஆங்கிலேய சமஸ்கிருத நாடகங்களைப் போன்ற நாடகங்களோ அதுவுமறியேம்.

அதுநிற்க, ஆங்கிலேய பாஷையில் யாம் மிகுதியுங் காணும் வசனக்கிரந்தங்கள் தமிழிற்கிலையா. ஒவ்வொருபாஷையின்சரித்திரத்திலும், செய்யுள்முந்தியுஞ்

டினம்பிந்தியுமே வருகின்றது. தமிழ் வசனம்வருங்கா லமவையும் நிலைநின்றிலதுபோலும். தமிழ்வசனங்களுக்குள் முந்தியது பெருந்தேவனார் பாரதத்து ஆங்காங்கு வரும் வசனங்களே. அதற்குப்பிந்தியவை நச்சினார்க்கினியா, பரிமேலழகாமுதலிய உரையாசிரியரால் உரையிலெழுதப் பட்டவையே. இவையொன்றும் வசனக்கிரந்தமாகா. கிறீஸ்துபிறந்துபத்தொன்பதாம் நூற்றுண்டின்முற்பகுதியில் வசித்தவரும் ஆங்கிலேய துரைத்தன வித்தியாசாலையிற் றமிழ்ப்பண்டிதரா யிருந்தவருமாகிய தாண்டவராயமுதலியாரெழுதிய பஞ்சதந்திரமே முதன் முதலெழுதப்பட்ட வசனக்கிரந்தமாகத் தோற்றுகின்றது. வீரமாமுனிவரெழுதிய பரமார்த்தகுருகதை யதற்குமுந்தியதேல் அதுவே முதற்கிரந்தமாம். வசனத்தின் மகிமைதெரியாமையினன்றே நம்முன்னோர் வசனத்தில் நூல்செய்யா தொழிந்தனர். அவர்களியற்றிய செய்யுட்கிரந்தங்களிற் சில வசனத்திலெழுதப்பட்டிருந்தால் சிறந்திருக்குமன்றோ!

அதுநிற்க, ஆங்கிலேயபாஷையில் சாஸ்திரங்கள் அனேக மிருக்கின்றனவே, இவைபோற் சாஸ்திர நூல்கள் தமிழிலில்லையாவென்பீரேல், ஏன் இல்லை! கௌளிநூல், பஞ்சபட்சி, கனவுநூல், சகுனநூல், இரேகைநூல்முதலியசாஸ்திரங்கள் அளவிறந்தன இருக்கின்றன. நீங்கள் கூறும், மற்றைய சாத்திரங்கள்மிலேச்சராகிய ஆங்கிலேயர் பிற்காலத்துக் கொணர்ந்தவையே. இவற்றையெல்லாமொரு பொருட்படுத்து நம்முன்னோர் கவனித்திலர்,

"அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ வெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டுதடு மாற்றம்
போஓந் துணையறிவா ரில்:"

எனப்பாடியநம்முன்னோரா தற்கால ஆங்கிலேயசாஸ்திரங்களைக் கவனிப்பவர்? ஆயினும வாக்குவாதம்வருமல இச்சாததிரஙகள்யாவுந் தமிழிலிருக்கின்றனவெனம்பண்டிதர்மாா கூறுவாா. அவையெங்கிருக்கிருக்கின்றனவா? ஏன்வெளிப்படா திருக்கின்றனவோ? இவைகைககஞ்சனமிட்டுப் பார்த்தே யறியவேண்டும்

தமிழிலே வேதாந்த சித்தாந்தப் புத்தகங்களனேக மிருக்கின்றன. சிவஞானபோதம், சிவஞானசித்தி, முதலியபதினன்கு சித்தாந்தப் புத்தகங்களும், கைவல்லியம், ஞானவாசிட்டம்முதலிய வேதாந்தப்புத்தகங்களும் இருக்கின்றன. இவையாவும் யாவராலும்வாசிக்கக் கூடியனவல்ல இலக்கிய இலக்கணப் பயிற்சியுடையோ ஒருவன் வேதாந்த சித்தாந்த மறிந்தோரிடத்தில் வாசிப்பானுயிற்சந்தேகமறக் கற்கமுடியும். இந்நூல்கள் வேதாந்த சித்தாந்தம் வாசிக்குஞ் சிலராலன்றி ஏனையோர் பலராலும் வாசிக்கப்படுவனவன்று. காஞ்சிப்புராணமும், தொல்காப்பியச் சூத்திரவிருத்தியும், இயற்றிய சிவஞானமுனிவரே 'திராவிடமகாபாஷியம்' என ஒருபெரியசித்தாந்த நூலியற்றியிருக்கின்றனர். கற்றுவல்ல சகலராலுந் துதிக்கப்படும் அந்நூலைச்சகலர்க்கும் எளிதிற்கிட்டும்படி அச்சிட்டு வெளிப்படுத்தும் புண்ணியவான்யாரோ! அந்நூல் நங்கைக்கு எந்நாட்டான் கிட்டுமோ! இதுவன்றி சிவஞானமுனிவர் தர்க்கசங்

ஞரகம் அன்னம்பட்டீயம் என்னும தர்க்க நூலே மொழி பெயாத திருக்கின்றனர். இதுவன்றி வேறுசில தாக்க நூல்களுமிருக்கின்றன. சோதிடநூல்கள் அநேகமுள; கணிதநூலகள் சிலவுள.

இதுகாறும் தமிழ்நூல்களின்பிரிவுகளை யெடுத்துக் காட்டி ஒவ்வொருபிரிவிலுஞ் சிலநூல்களை யெடுத்துக் காட்டினேனேயன்றி நூல்யாவற்றையுமெடுத்துக்கூறத் தொடங்கினேனல்லன். தமிழிலிருக்கும் அளவிறந்த சிறுநூல்களையு மதகாரணம்பறறியே எடுத்துககூறி லேன். கூறியவற்றினும் குறிப்பாய்ச்சிலபல சொன்னேனன்றி ஒவ்வொருநூலேப்பற்றியும் சகலதுஞ்சொல்லத்தொடங்கினேனல்லன். இதை நினைந்துகற்றறிந்த பெரியோர் யான் கூறியும் கூருதும்விட்ட குறைநிறைகளை மன்னிப்பாராக.

இவை யித்தன்மைத்தாயிருக்க, தற்காலத்துத்தமிழிருக்கும நிலைமையெடுத் தரைக்கவும்வேண்டுமோ? அருமறையோது மந்தணாளர்க்கெல்லாம் ஆங்கிலேய பாஷை சுயபாஷையும் அன்னியபாஷை தமிழுமானது இக்கலிகாலத்தின்கூத்தோ! ஆங்கிலேயபாஷையிலோர் சிறுகிரந்தந் தெரியாதிருத்தல் அவமானமாக, கம்பர்பாடியது இராமர்கதையோ தருமர்கதையோவென வினவல் மரியாதையாயது கலிகாலவிநோதமே! ஆங்கிலேயபாஷையை அடுப்படியிற்கேட்பேமேல் தமிழ்தானெங்குபோயிற்றோ! தந்தைக்குத்தலையிடிக்கமயானத்தில்விறகடுக்கிய சண்டாளன்கெதியாயிற்றன்றோ தமிழர்கெதி! தொட்டிலிற்பழக்கஞ் சுடுகாட்டுமட்டும் என்னும் பழமொழியும் பாஷைவிஷயத்திற் றவறிற்றன்றோ! இந்

நிலைமையை விஸ்தரித்தாம் பயனென் ? வருந்தியழைத்தாலும் வாராதவாரா. ஆயின் தற்காலத்துத் தமிழுகற்றோர் யாருமிலரா என்பிரேல் உளர். அனேகருளர். இருந்துமென் ? போகுமுயிரை யிழுத்துப்பிடிக்க முடியுமா ? இன்னமொரு இராமாயண மெக்காலத்துக்காணப் போகிறோம் ? இன்னமொரு குறள் யாவர் இயற்றப் போகிறார் ? இன்னமொரு கந்தபுராணமிரங்கித்தான் வருமா ? தற்காலவித்துவான்கள் இயற்றக்கூடியவை இரட்டைமணிமாலை, அந்தாதிமுதலிய சிறு நூல்களே. சிறந்த வித்துவானெழுதுவது கலம்பகமே. இதற்கு மேலியற்ற எவரான்முடியும் ? அந்தோ! அந்தோ! தமிழின் மகிமை தற்காலத்தூன்றாய் விளங்கிற்றே! தமிழ் திருந்தவேண்டு மென்னும்விருப்பமுடையோர் அந்தாதி கலம்பகம் முதலியவை யெழுதுவதனாலென்னபயன்? அவ்வாறு எழுதினும் அதினும் புதிதேதாவது சொல்வரா? சொல்லார். அந்தோ அதுதவறென்பர். கூறும்பொருளும், கூறும்விதமும் முன்னோர்கூறியவிதமே கூறவேண்டுமாயின் திருந்துவதற்குவழி யெங்ஙனே? உருவகம், உவமைமுதலியவும் முன்னோர்கூறியவற்றிற்பிறிது கூறிற்றவறென்பரேல், ஐயன்மீர், தமிழுய்யும் வழிதானெவ்வாறோ? முன்னொருகால் யானியற்றிய செய்யுளொன்றில் காக்கையிற்கரியகூந்தல் என்றெழுதியதற்குப் பண்டிதர்மூவர் "முன்னோர்யாவரும் இவ்வாறு கூற வில்லையே. இதுதவறு" என்றனர். முன்னோர் காக்கை கரிதென்றுசொல்லாவிடிற் காக்கைகரிதல்லவெனக்கூறக்கூடிய பண்டிதருடன் யாம்யாது செய்யலாம்? முன்னோர் கூறியவற்றையே திருப்பிக்கூறுவதிலாம்பயனென்னோ ? கூறியது கூறலுங் குற்றமாமன்றோ ? செய்யுளெழுதவல்லோர் தமிழிற்புதிதாயொன்

ரெழுதுவரேல் பிரயோசனமாம். அன்றேல், பிறபாஷையிலிருந்து மொழிபெயர்ப்பரேல் பிரயோசனமாம். தமிழிற்குமுக்கியமாய் வேண்டியவை வசனக்கிரந்தங்களும், தேசசரித்திரங்களும், தற்காலசாஸ்திரங்களுமே. இவற்றுளொன்று செய்வோர் நன்மைசெய்வோராவர். ஒரு கலம்பகமெழுதுங் காலத்து, ஆங்கிலேயபாஷையிலிருந்து ஒரு நூலையாவது அல்லது சொந்தமாக ஒருவசனத்தையாவது எழுதுவோர் தமிழிற்குதவி செய்தோரும், தமிழர்க்கு நன்மைசெய்தோருமாவர். அதுவிட்டுச் சீறொண்ணியகராதிபார்த்துச் செய்யுள் செய்வதில் யாதுபயன்? தமிழ்திருந்துவ தெவ்விதம்? அன்றித் தமிழ் என்னாளு மிந்நிலைமையிலிருத்தல் வேண்டுமோ? தமிழ் வித்துவான்கள்யாவருந் தமிழின் தற்காலநிலைமையைக்கவனியா திருக்கின்றனரோ! தமிழர்களே, உங்கள் சுதேசாபிமானம் எங்குபோயிற்று? தமிழின் ஆயுள் முடிந்ததென்பீரோ? அவ்வாறுகூறற்க. அதைரியப்படாது தமிழைவிருத்திபண்ண வேண்டியதே சுதேசாபிமானிகளின்கடமை. தமிழ் இருந்தநிலைமையை நோக்குங்காலத்து அதன்மகிமை புலப்படவில்லையா? ஆங்கிலேய பாஷைமுதலிய பாஷைகள்போற் றிருந்துவதுங் கஷ்டமா? இவ்விதபாஷையைக்கைசோரவிட உங்களுக்கு மனம்வருகின்றதா? காக்கைக்குந் தன்குஞ்சு பொன்குஞ்சென்பரேல் நமது தமிழ்ப்பாஷையை விருத்திபண்ணுதல் நமது கடமையன்றோ? தமிழிருந்தநிலைமையையும், தமிழிருக்கும் நிலைமையையும் நோக்குங் காலத்து "நீ யிருந்த வுச்சியென்ன, நீ விழுந்தபள்ளமென்ன" எனத்தற்காலதமிழ்ப்புலவர் ஒருவருடன்கூற வேண்டியிருக்கின்றதே! (Into what pit thou seest, from what height fallen!) ஐயன்மீர் கைவிடாதே

யுங்கள்." அந்தரித்த நேரத்திற் கையுதறுவது ஆண்மைக் கட்கழகோ? ஐயன்மீர் நும்மாலியன்றமட்டுமே தமிழ் வாசியுங்கள். இயன்றமட்டும் விருத்திசெய்யுங்கள். இயன்றமட்டுமே பரப்புங்கள். ஐயன்மீர் இது நுமகடனும். 'பண்டிதர்கள் இருக்கிறார்கள், தமிழைப் பாதுகாத்துக் கொள்வார்கள். நம்வேலையை நாமபார்ப்போம்' என்று சொல்லாதேயுங்கள். பாலையுமவைத்துப் பூனையையுங் காவல் வைப்பார்களா? பண்டிதர்களாலவரும் நன்மையோ சிறிது சிறிது மிகவுஞ் சிறிது. அவர்செய்யுந் தீமையோ கொடிது, கொடிது மிகவுங்கொடிது ஆங்கிலேயபாஷைகற்றுச் சாஸ்திரபயிற்சியுள்ள நீங்களே நன்மைசெய்ய வேண்டும். சகலர் நம்பிக்கையு முங்கள்மேலேயே யிருக்கின்றது. தமிழணங்கு தள்ளாடும் பருவமெனக்கைவிடாதேயுங்கள். நுமமனதை. யொருப்படுத்தித் தமிழ்கற்கத் தொடங்குங்கள்.

முற்றிற்று.